20th September 1958]

MR. SPEAKER : நியாயமா, தர்மமா என்று இங்கே கேட்கக்கூடாது.

SRI S. RAMALINGA PADAYACHI : விஞ்ஞான முறையில் சந்திரமண்டலத்திற்கு ஆட்கள் அனுப்பப்படுகிற இந்தக் காலத்திலும் கூட உடையார்பாளையம் தண்ணீர் இல்லாமல் தவிக்கிறதே ? தண்ணீர் சப்ளைக்கு அங்கே ஒரு திட்டம் வகுக்கக்கூடாதா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : உடையார்பாளையத்தில் தண்ணீர் சப்ளை செய்ய வசதி செய்யப்பட்டிருக்கிறது. இப்போது குறிப்பிட்ட பிரகாரம் அந்த ஜில்லாவிற்கு 3 லட்சத்திற்கு 50 ஆயிரம் செலவாகிறது. மதுரைக்கு 53 ஆயிரம்தான் ஆகியிருக்கிறது.

*Mettur Right Bank Canal.*

* 364 *Q.*—SRI P. G. MANICKAM : கனம் பொது மராமத்து அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

கோயம்புத்தூர் ஜில்லா, பவானி தாலூக்காவிலே ஜம்பை கிராமம் வரைக்கும் கொண்டுவரப்பட்டிருக்கும் மேட்டூர் வலது கரை வாய்க்காலை ஜம்பை உப-பிரிவிலிருந்து அப்பக்குடல் குளத்து (ஏரி) வரைக்கும் விஸ்தரிக்கவேண்டும் என்று 1957-ம் வருடம் டிசம்பர்மீ 30-ம் தேதி மேற்படி கிராமத்துக்கு விஜயம் செய்த கனம் பொது மராமத்து அமைச்சர் அவர்களிடம் விவசாயிகளால் கொடுக்கப்பட்ட விண்ணப்பத்தின்மீது எடுக்கப்பட்டு வரும் நடவடிக்கைகள் யாவை ?

THE HON. SRI P. KAKKAN : The Government have carefully examined the request of the petitioners for extending the Mettur Right Bank Canal up to Appakudal, etc., villages. As the contemplated ayacut of 18,000 acres under the Right Bank Canal has already been secured, the question of inclusion of new lands in the ayacut of the canal can be considered only if the secured ayacut cannot be developed fully. It has therefore been decided to watch the development of the ayacut for some more years before considering the question of extending the canal any further.

SRI P. G. MANICKAM : மேற்படி வாய்க்காலானது, ஜம்பை வரைக்கும் விஸ்தரிக்கப்பட்டிருக்கிறது. ஆனால் ஜம்பையில் இருந்து கழிவாகிற தண்ணீர் ஆற்றில்தான் போய் கலக்கிறது. ஆகவே, கழிவாகிற தண்ணீரையாவது வாய்க்கால் மூலம் அப்பக்குடலுக்குக் கொண்டு போனால் அது விவசாயிகளுக்கு பயன்படுவதோடு ஆயிரக்கணக்கான ஏக்கர் நிலங்களுக்கு அதன் மூலம் தண்ணீர் கிடைக்கும். ஆகவே இந்த அரசாங்கம் அதை மீண்டும் பரிசிலனை செய்யுமா ? 9-30 a.m.

THE HON. SRI P. KAKKAN : இப்பொழுது முடியாது. இரண்டு மூன்று வருடங்கள் பார்த்துத்தான் பரிசிலனை செய்யப்படும்.

*Kallakudi temples*

* 365 *Q.*—SRI S. LAZAR : Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) whether trustees have been appointed for the Kallakudi village deities in Lalgudi taluk, Tiruchirappalli district;

(*b*) how long the office had been kept vacant;

(*c*) the reasons for not appointing new trustees so far;

(*d*) the reasons for the removal of the old trustee;

(*e*) how soon trustees will be appointed ; and

(*f*) whether any lands belonging to the village deities were exchanged by the Hindu Religious and Charitable Endowments Department during the period when no trustees were in office and the affairs were in the management of the Executive Officer?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) An Executive Officer has been appointed as trustee.

(*b*) It was never kept vacant.

(*c*) As the village is a factious one and as the management by the previous *de facto* trustee was not satisfactory, local persons have not been appointed as trustees.

(*d*) Vide answer to clause (*c*).

(*e*) The Executive Officer of Sri Alandurayar, etc., temples, Keelapalur, has been appointed as trustee for a period of 5 years from 15th October 1957. The question of appointment of a local man as trustee will arise only if such appointment will ensure the smooth administration of the temples.

(*f*) No.

SRI A. GOVINDASAMY : ஒரு சர்க்கார் அதிகாரியை எப்படி ட்ரஸ்டியாக நியமிக்கலாம்? அந்த கிராமத்திலிருந்து அதற்கு ஒரு ஆள் கிடைக்கவில்லை என்றால் அடுத்த கிராமத்திலுள்ள ஒருவரையாவது ட்ரஸ்டியாக நியமிக்க என்ன கஷ்டமிருக்கிறது ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: கோவில்கள் எல்லாவற்றிற்கும் சேர்த்துள்ள வருமானம் வருடத்திற்கு 600 ரூபாய்தான். அங்கு ஐந்தாறு கோவில்கள் இருக்கின்றன. அங்கு கட்சிகளும் இருக்கின்றன அந்த ஊரில் உள்ள ஒருவரையே டிரஸ்டியாக நியமிக்க முடியவில்லை என்றால் இன்னொரு ஊரில் இருந்து ஒரு டிரஸ்டியைக் கொண்டு வந்தால் தகராறுதான் வரும். ஆகவே எக்ஸ்ஸிக்யூட்டிவ் அதிகாரி டிரஸ்டியாக நியமிக்கப்பட்டிருக்கிறார். அதில் தவறு ஒன்றுமில்லை.

SRI S. LAZAR : எப்படியும் இடம் காலியாக வைக்கப்படவில்லை என்று சொன்னார்கள். பெர்மனன்ட் டிரஸ்டி நீக்கப் பட்ட பிறகு என் டௌமென்ட் டிப்பார்ட்மென்டிலுள்ள ஒரு உத்தியோகஸ்தர் ஏதாவது கண்காணித்து வந்தாரா ? அப்பொழுது இந்த அதிகாரி டிரஸ்டியாக இருந்தாரா ?



THE HON. SRI M. BHAKTAVATSALAM : இந்த நியமனங்கள் ஏரியா கமிட்டியினால் நியமிக்கப்படுவதாகும். முன்பிருந்த டிரஸ்டி "என்னால் இதைப் பார்க்கமுடியவில்லை" என்றும், "எனது வேலை கெட்டுப்போகிறது" என்று சொல்லியும் ராஜினாமா செய்து விட்டார். பின்னர் தான் எக்ஸ்ஸிக்யூட்டிவ் ஆபீஸர் டிரஸ்டியாக நியமிக்கப் பட்டிருக்கிறார்.

### *Agricultural Machinery Advisory Committee*

*366 *Q.*—SRI A. VEDARATHNAM : கனம் உள் விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) வேளாண்மை இயந்திரக் கருவிகள் ஆலோசனைக் கமிட்டி (Agricultural Machinery Advisory Committee) எத்தனை ஆண்டுகளாகப் பணிபுரிந்துவருகிறது ?

(ஆ) இதன் உறுப்பினர் யாவர் ?

(இ) இதுவரை அவர்கள் செய்த குறிப்பிடத்தகுந்த வேலை என்ன ?